Regd. No TN/MS (C) 244 . ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 40 காசு

உண்மை

உண்மைக்கு தோல்வி என்பதே கிடையாது.

-அண்ணல் காந்தி






புதுமை

வேண்டாத பழமை யைத் தள்ளி வேண்டிய புதுமைகளை ஏற்கக் கற்றுக் கொள்ள வேண் டும்.

-பேரறிஞர் அண்ணா

மலர்: 6 சென்னை 19 - 3 - 82 வெள்ளி வெளியூர் 20· 3 - 82 சனி இதழ்: 149

★ ரூ. 163 லட்சம் மதிப்பீட்டில் ஓசூரில் புதிய மின்னணு தொழிற்சாலை

★ ஆண்டொன்றுக்கு 50 ஆயிரம் டிஜிட்டல் கைக்கடிகாரங்கள் தயாரிக்கத் திட்டம்

★ 1 கோடி ரூபாய் மூலதனத்தில் டிரான்ஸ் ரீசிவர்கள் தயாரிப்புத் தொழிற்சாலை

★ தொலைபேசி கருவிகளைத் தயாரிக்கும் தொழிற்சாலை அமைக்கத் திட்டம்

தமிழ்நாட்டில் மின்னணுத் தொழில் வளர்ச்சிக்கு

# புதிய திட்டங்கள்

## வேலை வாய்ப்புப் பெருக கழக அரசின் தீவிர நடவடிக்கைகள்

**சென்னை, மார்ச் 19- தமிழ்நாட்டில் மின்னணுத் தொழில் வளர்ச்சி பெருகவும், அதன் மூலம் ஏராள மானோருக்கு வேலை வாய்ப்பு அளிக்கவும் கழக அரசு பல்வேறு நடவடிக்கைகளை எடுத்து வருகிறது.**

சட்டசபையில் தாக்கல் செய்யப்பட்ட, பெரும் தொழில்கள் பற்றிய அறிக்கையில் இது பற்றி தெரிவிக்கப் பட்டுள்ளதாவது;

இந்நிறுவனம் தேவைக் கேற்ப தளவாடங்கள் உற்பத்தி செய்யும் திட்டத்தின் கீழ், கருவிகளை வழங்க ஒப்புக்கொண்டுள்ளது. இந்நிறுவனம் மின்னணு ஒலி பெருக்கியைத் தயாரித்து அங்காடியில் விற்பனைக்குக் கொண்டு வந்துள்ளது. இக் கருவியை பாதுகாப்புத் துறை, ரெயில்வே தபால் தந்தித் துறைகளுக்கு வழங்க முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டு வருகின்றன. இதற்கு ஆதரவாக ஆராய்ச்சி மேம்பாட்டுப் பிரிவு ஒன்றும் அமைக்கப் படும்.

ரூ. 100 லட்சம் மூலதன செலவுடன் "டிரான்ஸ் ரிசீவர்கள்" தயாரிக்கும் திட்டத்தைச் செயல் படுத்துவதற்கு தொழில் நுட்ப உதவிக்காக இங்கிலாந்திலுள்ள புகழ் பெற்றஒருநிறுவனத்துடன் பேச்சுவார்த்தை நடை பெற்றுவருகிறது.

### தொலைபேசி கருவி தயாரிப்பு

தொலைபேசி கருவி களைத் தயாரிக்கும் மற்றொரு பெருமுயற்சிக்கு மத்தியஅரசின் கொள்கை இசைவு எதிர்பார்க்கப்படு கிறது.

மேற்சொன்னவற்றின் அடிப்படையில் அடுத்த ஆண்டில் நிறுவனத்தின் விற்று முதல் ரூ. 300 லட்சமாக அமையுமென எதிர்பார்க்கப்படுகிறது.

மின்னணுவியல் தொழிலானது வளர்ச்சியடையக் கூடிய ஒன்றாக இருப்பதால் இந்நிறுவனம் தானே சொந்தமாக தொழில் பிரிவுகளைத் தொடங்குவதுடன் தகுதி வாய்ந்ததனியார்தொழில் முனைவோர்களின் கூட்டு முயற்சிக்கும் உதவி செய்ய திட்டமிட்டுள்ளது. கார்பன் மெட்டல் பிலிம் ரெசிஸ்ட்டர்கள் சிறு கணக்கிடு பொறிகள் கதிர் மின் மருத்துவ சாதனங்கள் பிரிண்டட் சர்க்கியூட் போர்டுகள் வீடியோ பிளேயர்ஸ் ஆகியவை களைத் தயாரிக்கும் திட்டங்கள் இந்நிறுவனத்தின் பரிசீலனையில் உள்ளன. இத்திட்டங்கள் கைகூடுமாயின் மூலதனச் செலவு சுமார் ரூ. 300 இலட்சமாக இருக்கும். ஆனால் இது கூட்டு முயற்சியில்பங்குகொள்ள முன்வரும் தகுதியான தொழில் முனைவர் கிடைப்பதைப் பொறுத்துள்ளது.

தமிழ்நாடு மின்னணுத் தொழில் நிறுவனம், தமிழ் நாடு அரசுக்கு முழுதும் சொந்தமான தனியார் நிறுவனமாக அமைக்கப் பட்டது. கூட்டுத் துறைத் திட்டங்களில் பங்கு கொள்வது உட்பட மின்னணுவியல் துணைத் தொழில்களை வளர்ச்சியுறச் செய்வதும், மேம் படுத்துவதும் இந்நிறுவனத்தின் நோக்கமாகும்.

தொழில் வளர்ச்சியில் பின்தங்கிய பகுதியான

ஓசூரில் "அலுமினியம் எலக்ட்ராலிட்டிக் கெப்பாசிட்டர்கள் தயாரிக்கும் திட்டத்தைச் செயல்படுத்துவதற்காக எடுத்துக் கொண்டது".

### ஓசூரில் தொழிற்கூடம்

ஜப்பானிய நிறுவனம் இயந்திரங்களை வழங்க ஒப்பந்தம் செய்துகொள்ளப்பட்டுள்ளது. ஓசூரில் உள்ள தமிழ்நாடு தொழில் முன்னேற்ற நிறுவன இணையத்தில் கட்டப் பட்ட தொழிற்கூடம் ஒன்று கையகப்படுத்தப் பட்டுள்ளதால்இயந்திரங்கள் வந்து சேர்ந்தவுடன் அடுத்த ஆண்டு தொடக்கத்திலேயே வணிக அளவில் உற்பத்தி தொடங்கப்படும்.

இத்திட்டத்திற்கான மூலதனச் செலவு ரூ. 163 லட்சமாகும். இது ஆண்டொன்றுக்கு 50 மில்லியன் எலக்ட்ராலிட்டிக் கெப்பாசிட்டர்களை உற்பத்தி செய்யும் திறன் கொண்டது. தொழில் நுட்பப் பிரிவிலும், தொழில் நுட்பம் அல்லாத பிரிவிலும், நிர்வாக ஏனைய வகைகளில் 150 முதல் 200 பேர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கப்படும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. தமிழ்நாடு தொழில் முன்னேற்ற நிறுவனத்திடமிருந்தும், தமிழ்நாடு தொழில் முதலீட்டு நிறுவனத்திடமிருந்தும் இத் திட்டத்திற்குகாலவரம்புக் கடனாக ரூ. 90 இலட்சம் பெற ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது.

### மின்னணு கடிகாரங்கள்

ரூ. 19 இலட்சம் மூலதனச் செலவுடன் ஆண்டொன்றுக்கு 50,000 டிஜிட்டல் மின்னணுவியல் கைக்கடிகாரங்களை தயாரிக்கும் மற்றொரு திட்டம் எடுத்துக் கொள்ளப்பட்டு வருகிறது. இத் திட்டத்திற்கு ஜப்பானிலிருந்து தொழில் நுட்ப ஆலோசனைபெற்றுவரும் "செமிகண்டக்டர் காம்ப்ளக்ஸ் சண்டிகார்" என்கிற நிறுவனம் தொழில் நுட்ப உதவி அளிக்கும்.

செயல்படுத்துவதற்காக எடுத்துக் கொள்ளப் பட்ட தொலைக் காட்சிப் பெட்டிகள் தயாரிக்கும் திட்டம் 1982—83-ல் உற்பத்தியைத் தொடங்குமென எதிர்பார்க்கப்படுகிறது.

எதிர்கால மேம்பாட்டிற்காக ஓசூரில் உள்ள நிலம் மற்றும் கட்டிடம் நீங்கலாக, இந்நிறுவனம் தமிழ்நாடு தொழில் முன்னேற்ற நிறுவனத்திடமிருந்து ஓசூரில் மேலும் 35 ஏக்கர் நிலத்தையும், தொழில் வணிகத்துறை இயக்கத்திடமிருந்து திருவான்மியூரில் 5 ஏக்கர் நிலத்தையும் கையகப் படுத்தி உள்ளது.

இவ்வாறு குறிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## ஜனாதிபதியுடன் பிரதமர் இந்திரா சந்திப்பு

புதுடெல்லி, மார்ச் 19- பிரதமர் இந்திரா காந்தி இன்று காலை ஜனாதிபதி சஞ்சீவரெட்டியை சந்தித்துப் பேசினார்.

இச்சந்திப்பு 30 நிமிட நேரம் நீடித்தது.

## குறிப்பிட்ட தொழில்கட்குமான்யம்: தமிழக அரசின் சிறப்புத் திட்டம்

சென்னை, மார்ச் 19— தமிழக சட்டசபையில் தொழில் அமைச்சர் திருநாவுக்கரசால்தாக்கல் செய்யப்பட்ட கொள்கை விளக்கக் குறிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:-

சில குறிப்பிட்ட தொழில்களை ஊக்குவிக்கும் நோக்கத்துடன் தமிழக அரசு ஒரு மானிய திட்டத்தை ஏற்படுத்தியுள்ளது. இத்திட்டத்தின் கீழ் மின்அணு, மருந்துகள் தயாரிப்பு, மற்றும்மோட்டார் வாகன உபரி தொழில்கள் அடங்கும்.

மேலே கூறப்பட்ட தொழில்கள் மத்திய மற்றும் மானிய திட்டத்தின் கீழ்வராத தமிழகத்தின் எந்த பகுதியில் நிறுவப் படும் எந்த ஒரு நிறுவனமும் அதன் நிலையான முதலீட்டில் 10 சதவீதம் மானியமாகவோ அல்லது ஒரு நிரந்தர ஊழியருக்கு ரூபாய் 20,000 அல்லது ரூ.10 இலட்சம் ரூபாய் என்ற இந்த மூன்று வகையான திட்டத்தில் எது குறைவோ அதைப் பெறலாம். இத்திட்டம்பாரதத்தின் எந்த பகுதியிலும் இதுவரை செயல்படுத்தப் படாத ஈடு இணையற்ற தமிழக அரசின் திட்டமாகும். இத்திட்டம் 1981-ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 3ம் நாள் முதல்அமுலுக்குகொண்டு வரப்பட்டுள்ளது.

மத்திய அரசின் நேரடி மானியம், அல்லது உதவி தொகைவழங்கும்திட்டத்தின் கீழ் மத்திய அரசிடம் இருந்து ஈட்டுத்தொகை பெறுவதில் மற்ற மாநிலங்களை விட தமிழ்நாடே தொடர்ந்து முதலிடம் வகித்து வருகிறது.

இவ்வாறு அக்குறிப்பில் தெரிவிக்கப் பட்டுள்ளது.

## தீப்பெட்டி, பட்டு உற்பத்தியில் தீவிர நடவடிக்கைகளால்

# 50 ஆயிரம் பேருக்குவேலை

## அமைச்சர் கே. ஏ. கே. தகவல்

### தமிழக தொழிற்பேட்டைகளை பின்பற்ற பிற மாநிலங்கள் ஆர்வம்

**சென்னை, மார்ச். 19- முதல்வர் புரட்சித்தலைவரது ஆட்சியில் சிறுதொழில்கள் வளர்ச்சி வேகமாக வளர்ந்து வருகிறது. தீப்பெட்டி தொழில் மூலம் 10 ஆயிரம் பேருக்கும் பட்டுப்பூச்சி வளர்ப்பு மூலம் 40 ஆயிரம் பேர்களுக்கும் மேலும் வேலை வாய்ப்பு ஏற்படும்.**

**தமிழக தொழிற்பேட்டைகளைப் பார்த்து அதுபோல தொழிற்பேட்டைகளை அமைக்க பிற மாநிலத்தவர் ஆர்வம் காட்டுகிறார்கள் என்றும் அமைச்சர் கே. ஏ. கே. தெரிவித்துள்ளார்.**

கிராமத் தொழில்கள், சிறு தொழில்கள் பற்றிய கொள்கை குறிப்புகளை இன்றுசட்டப்பேரவையில் அமைச்சர் கே. ஏ. கே. தாக்கல் செய்தார்.

அதில் கூறப் பட்டுள்ள விவரம் வருமாறு:-

மாவட்ட தொழில் மையங்கள் திட்டம் மேலும் தொடர்ந்து நீடிப்பதற்கு மைய அரசிடமிருந்து அனுமதி பெறப்பட்டுள்ளது.

வளர்ந்து வரும் நடவடிக்கைகளை சிறப்பான முறையில் மேற்கொள்ளக்கூடிய வகையில் மாவட்ட தொழில் மைய அமைப்பிற்கு ஒரு இறுதி வடிவம் கொடுக்கவும் நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.

சென்னை அடையாறு டாக்டர்விக்ரம்சாராபாய் மின்னணுத் தொழில் பேட்டையும், ஓசூரில் உள்ள மின்னணுத் தொழில் பேட்டையும் தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவைகளாகும்.

இதர மாநிலங்களிலும் இப்படிப்பட்ட மின்னணு தொழிற் பேட்டைகளை அமைக்கும் நோக்குடன் அவற்றின் பிரதிநிதிகளை அனுப்புகின்றனர்.

### மகளிர் மின்னணு தொழிற்கூடம்

திருச்சி, காகலூர் கோவை, மதுரைதொழிற் பேட்டைகள் வேகமாக முன்னேற்றம் அடைந்து வருகின்றன.

சென்னையில் மகளிர்க்கான மின்னணுவியல் தொழிற்கூட கொட்டகையின் தேவை அதிகரித்து வருகிறது.

மகளிர் பயனடையும் வகையிலும், மகளிர் வேலை வாய்ப்பு அதிகரிக்கும் வகையிலும் கூடுதலாக இருதொழில் கொட்டகைகள் கட்ட உத்தேசிக்கப்பட்டுள்ளது.

82-83-ம் ஆண்டில் மேலும் 10 தொழிற்கூடங்கள் கட்டப்படும்,

மின்னணுச் சாதனங்கள் ஏற்றுமதியை மேலும் ஊக்கப்படுத்தும் வகையில் "தடையில்லா வர்த்தகப் பகுதி" ஒன்றை ஏற்படுத்துவதற்கு கோரிக்கைகள் அனுப்பப்பட்டுள்ளன,

நெசவாளர்களின் தேவைகளையும், துணி ஆலைகளின் தேவைகளையும் நிறைவேற்ற கூடலூரில் சாயப் பொருள்கள் தயாரிப்பு நிலையம் அமைக்கப்பட்டு வருகிறது.

சோடா ஆஷ் தயாரிக்க கூடிய தொழிற்சாலை ஒன்றும் தூத்துக்குடியில் நிறுவப்பட்டு வருசிறது.

### குமரியில் வைடூர்யம்

குமரி மாவட்டத்தில் தோவாலா வட்டத்தில் வைடூர்யம் என்னும் "கிரைசோ பெரில்" பற்றிய விவரமான ஆய்வு தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டது.

இதுவரை கிடைத்த முடிவுகள் நல்ல தரமுடைய மணிக்கற்களைக்

(2-ம் பக்கம் பார்க்க)

## லவ் லெட்டர்: கல்லூரி மாணவர்களிடம் நூதன மோசடி செய்த ஆசாமி கைது

சென்னை, மார்ச் 19— கல்லூரி மாணவர்களிடம் சென்று "நீ எழுதிய காதல் கடிதங்கள் உள்ளன" எனக் கூறி மிரட்டி பணம் பறித்து வந்தவாலிபர் ஒருவர் கைது செய்யப்பட்டார். இதுபற்றிய விவரங்கள் வருமாறு:—

சென்னை தேனாம் பேட்டையை சேர்ந்தவர் ஏசுதாஸ் என்ற வாலிபர் இவருக்கு ஹெலன், ஸ்டெல்லா உட்பட பல காதலிகள் ...ராம்.

ஏசுதாஸ் சைக்கிள் ஒன்றில் ஏறி சாலைகளில் செல்லும் கல்லூரி மாணவர்களிடம் சென்று கையில் ஒரு இளம் பெண்ணின் படத்தை வைத்துக் கொண்டு என் தங்கையான இவளுக்கு நீ காதல் கடிதம் எழுதியுள்ளாய். அக் கடிதங்களையும் நான் வைத்துள்ளேன். உன்னைப்பற்றி எல்லோரிடமும் கூறுவேன் எனக்கூறி கத்தியை காட்டி மிரட்டி பணம் பறிப்பது வழக்கமாம்.

இதே போன்று சேகர் என்ற கல்லூரி மாணவரிடம் மிரட்டி பணம் கைக்கடிகாரம் போன்றவற்றைப்பறித்துச் சென்றாராம்.

புகாரின் பேரில் உதவிக் கமிஷனர் ராஜன் உத்தரவின் பேரில்துணைஇன்ஸ்பெக்டர் நாகராஜன் ஏசுதாசை கைது செய்தார். இவரை கைது செய்ததற்காக போலீசாரானசுந்தரம் ஏலப்பன் ஆகியோருக்கு தலா 40 ரூபாய் அன்பளிப்பாக வழங்கப்பட்டது.

ரூ. 1 லட்சம்

### பெயிண்ட் எண்ணெய் திருட்டு: ஆசாமி கைது

சென்னை, மார்ச் 19— சென்னை துறைமுகத்தில் இருந்து ரூ. 1 லட்சம் மதிப்புள்ள நிக்கல் பெயிண்ட் எண்ணெயை திருடியதாக ஆனந்த பாண்டியன் என்பவர் கைது செய்யப்பட்டு எண்ணெயும் பறிமுதல் செய்யப்பட்டது.

இது தொடர்பாக குள்ளராஜா, பெல்பாட்டம் மணி ஆகியோரை போலீசார் தேடி வருகிறார்கள்.

### தமிழகம் குட்டி ஜப்பானாக மாற கைத்தொழில்களுக்கு ஊக்கம்

# 500 எண்ணை ஆலைகள் அமைக்க கடன் உதவி

## அமைச்சர் ராஜேந்திரன் தகவல்

**சென்னை, மார்ச் 19- தமிழகம் குட்டி ஜப்பான்போல மாற புரட்சித்தலைவர் ஆட்சியில் கைத்தொழில்களுக்கு ஊக்கம் அளிக்கப்படுகிறது. 500 மின் விசைச் செக்குகள் அமைக்க அரசு உதவும் என்று அமைச்சர் ராஜேந்திரன் கூறினார்.**

பொதுப்பணி கதர் கிராமத் தொழில் துறைகளின் மானியக் கோரிக்கைகள் மீது சட்டசபையில் நடந்த விவாதத்துக்குப் பதிலளித்து அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் கூறியதாவது:-

பனைமரத் தொழில் பற்றி இதுவரை அதிகமாக யாரும் சிந்திக்கவில்லை. இபபோது அது பற்றி பலரும் விவாதிக்கும் நிலை ஏற்பட்டது மகிழ்ச்சி தருகிறது.

தமிழகத்தில் 6 கோடி பனைமரங்கள் இருந்த போதிலும் 2 கோடி மட்டுமே பயன்படுத்தப்பட்டு 60 லட்சம் பனைகளிலிருந்து மட்டுமே பலன் கிடைக்கின்றன. இவற்றை நம்பி 30 லட்சம் குடும்பங்கள் உள்ளன. பனைத் தொழிலில் பழையவர்களே ஈடுபட்டு வருகிறார்கள். புதியவர்கள் யாரும் வரவில்லை. பனை மரத்தினால் 35 பலன்கள் உள்ளன. பனைப் பொருட்களை 34 நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறோம். இது லாபகரமான தொழில்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் பனை ஆராய்ச்சி நிலையம் உள்ளது. உயரமாக வளரும்பனையைகுட்டையாக வளர வைக்கவும், 6 மாதமே வரக்கூடிய பதனீரை ஆண்டு முழுவதும் வரவைக்கலாமா என்று கண்டுபிடிக்கவும் ஆராய்ச்சி நடக்கிறது. மாவட்டந் தோறும் பனை மரத்தொழிற் கூடம் அமைக்கப்படுகிறது.

### பனை ஊழியர் இன்சூரன்சு

பனைத் தொழிலாளர் பனையிலிருந்து விழுந்து இறந்தால் அரசு ரூ. 10 ஆயிரம் தருகிறது இது தவிர அவர்களுக்கு ஜனதா இன்சூரன்ஸ் மூலம் மேலும் ரூ. 10 ஆயிரம் கிடைக்கவும் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.

கதர் கிராம கைத்தொழிலில் 1976ல் 2 லட்சத்து 77 ஆயிரம்பேருக்கு வேலை கொடுக்கப்பட்டது 1981-82 ல் 4 லட்சத்து 66 ஆயிரம் பேருக்கு வேலை வாய்ப்பு கொடுத்துள்ளோம்.

1982-83-ல் 5 லட்சம் பேருக்கு வேலை தரத் திட்டம் உள்ளது.

1976-77ல் கதர் உற்பத்தி மதிப்பு ரூ. 3 லட்சத்து 81 ஆயிரம்.

ஆனால் 1981-82ல் கழக ஆட்சியில் ரூ. 8 கோடியாக அது உயர்ந்துள்ளது நடப்புஆண்டில் ரூ. 9 கோடியாக உயரும்.

1976-77ல் கிராமத் தொழில் உற்பத்தி மதிப்பு ரூ 15 கோடிதான். ஆனால் 1981-82ல் ரூ.37 கோடியாகஉயர்ந்து நடப்பு ஆண்டில் ரூ. 46 கோடியாக உயர உள்ளது. வேலை வாய்ப்பில்லாதவர்களுக்கு கிராமத் தொழில் துறை மூலம் தொழில் வாய்ப்பு ஏற்படுத்தித் தர திட்டங்கள் தீட்டப்பட்டுள்ளன. 500 மின் விசை செக்குகள் அமைக்க திட்டம் தீட்டப்பட்டு அந்த தொழில் தொடங்க வேலை வாய்ப்பில்லாதவர்களுக்கு உதவ முடிவு எடுக்கப்பட்டுள்ளது.

தரமான சோப்புகளை கதர் வாரியம் உற்பத்தி செய்கிறது. 1976-77ல் ரூ. 65 லட்சம் மதிப்பு சோப்பு உற்பத்தி ஆனது. 1980-81ல் புரட்சித்தலைவர் ஆட்சியில் உற்பத்தி ரூ. 131 லட்சமாக உயர்ந்துள்ளது. 1982—83ல் ரூ. 2 கோடி அளவுக்கு சோப்பு உற்பத்திச் செய்யப்படும்.

கிராமப்புற கைவினைஞர்களுக்கு உதவ ரூ. 7 கோடியில் திட்டம் தயாரிக்கப்பட்டுள்ளது.

கதர் நெசவில் ஆதிதிராவிடர்களை ஈடுபடச் செய்யவும் திட்டமிடப்பட்டு 8 தொழிலியல் நெசவுக்கூடம் ரூ. 47 லட்சத்தில் நிறுவ முடிவு செய்யப்பட்டுள்ளது. இதனால் 1000 ஆதிதிராவிட மக்கள் பலன் பெறுவார்கள்.

செருப்பு தைக்கும் மக்கள் 1000 பேருக்கு பங்க் கடை வைத்துத் தொழில் செய்யவும், இதற்கு கருவிகள் வாங்க ரூ. 1500 கடன் வழங்கவும் திட்டமிடப்பட்டுள்ளது. தமிழகம் குட்டி ஜப்பானாக மாறவேண்டும் என்ற அளவில் முதல்வர் புரட்சித்தலைவர் திட்டமிட்டு பாடுபடுகிறார்.

பொதுப்பணித்துறை மூலம் கட்டிடங்கள் கட்டுவது கால தாமதமாகக்கூடாது என்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. வேலையில்லா பட்டதாரிகளின் கூட்டுறவு நிறுவனத்திடமும் கட்டிடம் கட்டும் பொறுப்பு ஒப்படைக்கப்படும். துறை அதிகாரிகளைப் பயன்படுத்தியும் கட்டிடங்கள் கட்டப்படுகின்றன. இத்துறையிலுள்ள பதிவில்லா ஊழியர் (என். எம். ஆர்.) 756 பேர் நிரந்தரம்செய்யப்பட்டுள்ளனர். மற்ற 226 பேர் நிரந்தரம் செய்யப்படுவார்கள் இப்படிநிரந்தரம் பெறுவதற்கு 10 ஆண்டுகள் பணியாற்றி இருக்க வேண்டும் என்ற விதியை 5 ஆண்டாகக் குறைத்துள்ளோம்.

இவ்வாறு அமைச்சர் எஸ். என் ராஜேந்திரன் கூறினார்.

பொதுப் பணி கதர், கிராமத் தொழில் மானியக்கோரிக்கைகள் மீது முன்னதாக நடந்த விவாதத்தில் கடலாடி சத்தியமூர்த்தி (கழகம்) பேசுகையில் கூறியதாவது:

பனைத் தொழிலாளி இறந்தால் வழங்கப்படும் உதவித் தொகையை, அவர்கள் பனையிலிருந்து விழுந்து உடல் ஊன முற்றாலும் வழங்கவேண்டும். பனை மரத் தொழிலாளர்களுக்கு வீடு கட்ட இடமும் மானியத் தொகையும் வழங்க வேண்டும். எனதுதொகுதியில் பொதுப்பணித்துறை ஓய்வு நிலையம் கட்டித் தரவேண்டும்.

### டாக்டர் சமரசம்

கைத்தறி நெசவாளர்களுக்கு வீடு கட்டித்தரும் திட்டம்இருப்பதுபோன்று கதர் நெசவாளர்களுக்கும் வீடு கட்டும் திட்டம் கொண்டு வரவேண்டும். எங்கெங்கு காதி கிராப்ட் விற்பனை நிலையங்களைத் திறக்க முடியுமோ அங்கெல்லாம் அந்த கடைகளைத்திறக்க வேண்டும், நூற்பு நிலையங்களையும்அதிகப்படுத்த வேண்டும்.

இவ்வாறு டாக்டர் சமரசம் கூறினார்.

# கே. ஏ. கே. தகவல்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கண்டறிவதற்கு மேலும் ஆய்வு நடத்த வேண்டும் என்பதை உறுதிப்படுத்துகிறது.

மேலும்மாணிக்கங்கள், நீலமணிக்கல், பளிங்குமணிக்கல், முத்துப் போன்ற வெளிக்களிக்கல் ஆகிய விலை மதிப்புமிக்க ஆபரணக் கற்கள் பற்றிய ஆய்வுகள் திருச்சி மாவட்டத்தில் சின்ன தாராபுரம், கரூர், குளித்தலை பகுதியில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

இந்த ஆய்வு ஓரிரு ஆண்டுகட்குத் தொடர்ந்து நீடிக்கும்.

கரூர் அருகில் புலியூரில் ஏற்கனவே உள்ள சிமெண்ட் தொழிற்சாலைக்குத் தேவையான சுண்ணாம்புக்கல் படிமங்களைக் கண்டறிய வேடசந்தூர் பகுதியில் விவரமான ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.

குத்தகைக்கு விடப்பட்ட பகுதிகளிலும் குத்தகைக்கு விடப்படாதபகுதிகளிலும் மொத்தம்சுமார் 2கோடிடன், சுண்ணாம்புகல் படிந்துள்ளதாக கண்டறியப்பட்டுள்ளது.

தஞ்சை மாவட்டம் வேதாரண்யம் அருகில் சிலிகா மண் பற்றிய துவக்க ஆய்வு முடிக்கப்பட்டுள்ளன. தரமுடைய இந்த மண் கண்ணாடி செய்ய தகுதியானது ஆகும்.

### தர்மபுரியில் தங்கச் சுரங்கம்

கோலார் தங்கச்சுரங்க பாதைகள்தெற்குநோக்கி தர்மபுரி மாவட்டத்தில் கிருஷ்ணகிரி வட்டத்தில் உள்ள மகாராஜா கடைகாட்டுப் பகுதியினுள் பரவி இருப்பதாக தெரிகிறது.

இந்திய புவியியல் துறை, மற்றும் பாரத் தங்கச் சுரங்கம் ஆகிய நிறுவனங்களின் கூட்டுடன்மகாராஜா கடைப்பகுதியில் விவரமான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன.

கிழக்கு முகவை மாவட்டம் முதுகளத்தூர் வட்டத்தில் கோக்கடி, குருவாடி, அவந்தண்டி, கிராமங்களில் ஜிப்சம் படிந்துள்ளன.

சிமிட்டி தொழிலுக்கு உதவும் சுமார் 5லட்சத்து 20 ஆயிரம் டன் ஜிப்சம் இங்கே எடுக்க முடியும் என்று ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

5 தீப்பெட்டி தொழிற் கூட்டுறவு பணிச் சங்கமும் 20 தீப்பெட்டிபணியாளர் தொழிற் கூட்டுறவு சங்கமும் அமைக்கும் யோசனை ஆய்வில் உள்ளது. இதன் மூலம் 10 ஆயிரம் பேர்களுக்கு கூடுதலாக வேலை வாய்ப்பு கிடைக்கும்.

கிண்டியில் உள்ள தொழில் நுட்ப பயிற்சி நிலையத்தில் மின்னணுக் கருவியியல் மற்றும், குளிர் சாதனப் பொறியியல் "சான்றிதழ் பாட முறை வகுப்புகளை மாற்ற அரசு ஒப்புதல் அளித்துள்ளது.

இந்த தகுதிப்பட்டய பாடமுறைகள் அடுத்த ஆண்டு ஆரம்பிக்கப்படும். எம் 5 வகை முசுக்கட்டை செடிகளை எல்லாமாவட்டங்களிலும் இந்த ஆண்டு வளர்க்க உத்தேசிக்கப்பட்டுள்ளது.

இந்த ஆண்டு மேலும் கூடுதலாக 8 ஆயிரம் ஏக்கரில் முசுக்கட்டை பயிர் செய்ய கருதப்பட்டுள்ளது.

இந்த ஆண்டு இறுதியில் தமிழகத்தில் முசுக்கட்டை செடி பயிராகும் பரப்பு 56 ஆயிரம் ஏக்கராகஅதிகரிக்கும்.

### 40 ஆயிரம் பேருக்கு வேலை

பட்டுஉற்பத்தி 250டன்னாக உயரும். கூடுதலாக 40 ஆயிரம் நபர்களுக்கு வேலைவாய்ப்புக் கிடைக்கும்.

இவ்வாறு அந்தக் குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

(6-ம் பத்தி தொடர்ச்சி)

அமைக்கப்படும். இதன் தலைவராக சட்டமன்ற உறுப்பினர் கரூர் சின்னசாமியை நியமித்து முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டுள்ளார். மற்றும் சட்டமன்ற உறுப்பினர் சத்தியமூர்த்தி, விவசாயிகள் பிரதிநிதி திண்டுக்கல் சீனிவாசன் மற்றும் சட்டமன்ற உறுப்பினர்களான தொண்டா முத்தூர் சின்னராசு, செம்மலை ஆகியோரும் பொதுப் பணித்துறை நிதித்துறை செயலாளர்களும், வேளாண்மைத்துறை இயக்குனர் கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளரும் நிலத்தடி நீர் தலைமைப் பொறியாளர், நீரியல் ஆராய்ச்சி இயக்குனர், கோவை வேளாண்மைப் பல்கலைக் கழகப் பிரதிநிதி, அண்ணா பல்கலைக் கழகப் பிரதிநிதி ஆகியோர் கொண்ட ஒரு இயக்குனர் குழு நியமிக்கப்பட்டுள்ளது. சுமார் 2 ஆயிரம் குழாய் கிணறுகள் அமைக்கப்படவிருக்கின்றன. சென்னையில் கூவம் பக்கிங்காம் கரைகளில் உள்ள ஆக்கிரமிப்புகளை நீக்கி அந்தப் பகுதி பசுமையானதாக மாற்றப்படும். பயன் தரும் மரங்கள் வைக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது கூறினார்.

### அமைச்சர் ராசாமுகமது அறிவிப்பு

# நீர்ப்பாசன வசதிகளை பெருக்க, தமிழகத்தில் குழாய் கிணறு வாரியம்

**சென்னை, மார்ச் 19- நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்க குழாய்க் கிணறு வாரியம் அமைக்கப்பட்டுள்ளது. இதன் தலைவராக சட்டமன்ற உறுப்பினர் கரூர் சின்னசாமி நியமிக்கப்பட்டுள்ளார் என்று அமைச்சர் ராசாமுகமது தெரிவித்தார்.**

நீர்ப்பாசன மானியக் கோரிக்கை மீது சட்டமன்றத்தில் நடந்த விவாதத்திற்குப் பதில் அளித்து அமைச்சர் ராசாமுகமது கூறியதாவது:

தொடர் ஓட்டம் ஓடுகிறபோது முதலில் ஓடுபவர்கள் ஒழுங்காக ஓடினால் தான் தொடர்ந்து ஓடுகிறவர்கள் ஒழுங்காகஓடிவெற்றி பெற முடியும். எங்களைப் பொறுத்தவரையில் நாங்கள் ஒழுங்காக ஓடிக் கொண்டிருக்கிறோம்.

செண்பகத் தோப்பு அணைத்திட்டம் ஆய்வில் உள்ளது. ஆய்வு செய்யாது அணை கட்டினால் அணையைக் காணவில்லை என்று போலீசில் தான் புகார் செய்யவேண்டும். செண்பகத் தோப்பு அணைக்கான ஆய்வுகள் முடிந்துவிட்டன. 468 லட்சம் ரூபாய் மதிப்பில் 3 ஆயிரத்து 550 ஏக்கர் பாசன வசதி பெற இந்த அணைத்திட்டம் உதவும். இந்த அணைத்திட்ட ஆய்வுகள் இரண்டுமாதத்தில் அரசுக்கு வந்துவிடும்.

### ரூ.386லட்சத்தில் மலட்டாறு திட்டம்

மலட்டாறு திட்டம் 386 லட்சம் ரூபாய் மதிப்பீட்டில் தயாரிக்கப்பட்டிருக்கிறது. இதனால் 4 ஆயிரத்து 356 ஏக்கர் பாசன வசதி பெறும், முதுகுளத்தூர் தாலுகாவில் உள்ள 54 கண்மாய்களுக்கும் பாசன வசதி கிடைக்கும். கடலில் வீணாகும் தண்ணீரை பயன்படுத்தி பாசன வசதி ஏற்படுத்த அரசு நடவடிக்கை எடுத்து வருகிறது.

புதுக்கோட்டை மாவட்டத்தில் கலபம் அணைத் திட்டப்பணிகள் நடந்து வருகின்றன.

நெல்லை மாவட்டத்தில் கொடுமுடி ஆற்றுத் திட்டம் 70 லட்சத்து 80 ஆயிரம் ரூபாய் மதிப்பீட்டில் நிறைவேற்றப்படும். ஆயிரத்து 224 ஏக்கர் நிலம் பாசனவசதிபெறும்.

புதிய திட்டங்கள் துவங்கப்படவில்லை என்று சொன்னார்கள்.

இந்த ஆட்சிக்காலத்தில்தான் நீர்ப் பாசனத் திட்டங்கள் முன்னுரிமை பெற்று நடைபெறுகின்றன. காமராஜர் வாழ்ந்த மேற்குமுகவைமாவட்டத்தில் 34 ஆண்டுகளுக்குப் பின்னர் வேம்பக்கோட்டை அணை, மருவு நாகார்சுன அணைத்திட்டம் போன்ற திட்டங்களை 18 கோடி ரூபாய் முதலீட்டில் புரட்சித்தலைவர் ஆட்சிதான் நிறைவேற்ற இருக்கிறது.

நிலத்தடி நீரை நம்பி இருக்கும் விவசாயிகள் பருவ மழை பொய்த்துவிட்டால் பாதிக்கப்படுகிறார்கள்.

இந்த நிலையைப் போக்க பிள்ளத்தூருக்கு பக்கத்தில் மழை நீர் தேக்க அணை ஒன்று கட்டப்படும், இது 20 கோடிரூபாய் திட்டம்.

இதற்குஅண்டைமாநிலமான ஆந்திரம்ஒப்புதல்தர வேண்டும். 1982-83ம் ஆண்டு பட்ஜெட்டில் நடுத்தர புதிய பாசனத்திற்கு ரூ. 10 கோடி ஒதுக்கட்டப்பட்டுள்ளது. 11 புதிய நடுத்தர பாசனத் திட்டங்கள் பரிசீலனையில் உள்ளன. இதற்கு 50 கோடி ரூபாய் செலவாகும்.

### நீர்ப்பாசன வாரியம்: அரசு பரிசீலனை

நீர்ப்பாசன வாரியம் அமைக்கலாம் என்ற யோசனை பரிசீலிக்கப்படுகிறது. நிலத்தடி நீர் வளத்திற்கு ஏற்ப அதனைப் பயன்படுத்தக் குழாய்க் கிணறு வாரியம்

(1-ம் பத்தி பார்க்க)

### நாட்டைப் பாதுகாக்கும்

# காவல்துறையை கேவலப்படுத்தும் வகையில் சினிமாவா?

## அமைச்சர் ஆர். எம். வீ. கண்டனம்

**சென்னை, மார்ச் 19- நாட்டைப் பாதுகாக்கின்ற காவல் துறையை கேவலமாகச் சித்தரிக்கும் வகையில் சினிமா தயாரிப்பதா என்று அமைச்சர் ஆர். எம். வீ. கேட்டார்.**

தண்ணீர் தண்ணீர் சிவப்புமல்லி ஆகியதிரைப் படங்கள் பற்றி சட்ட மேலவையில் கேட்கப்பட்ட கேள்வி ஒன்றுக்கு அமைச்சர் ஆர். எம். வீ., பதில் அளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:—

தண்ணீர் தண்ணீர், சிவப்புமல்லி என்ற திரைப்படங்களைத்தடை செய்யவேண்டும் என்றும் தடை செய்யக்கூடாது என்றும் கோரி அரசுக்கு மனுக்கள் வந்தன.

இந்தப் படங்கள் ஏற்கனவே ஓடி இப்போது முடியும் தருவாயில் இருக்கிறது.

அதை மீண்டும் ஒரு பிரச்சினையாக ஆக்க வேண்டாம் என்று கருதுகிறேன்.

மாநில அரசுக்கு அனுப்பப்பட்ட மனுக்கள் மீது நடவடிக்கை எடுக்குமாறு மத்திய திரைப்பட தணிக்கைக்குழுவிற்கு அனுப்பி இருக்கிறோம்.

இந்தத் திரைப்படங்கள் மீது எந்த விதமான கருத்துக்களையும் அரசு எழுதவும் இல்லை.

திரைப் படங்களுக்கு மத்திய தணிக்கைக்குழுதான் அனுமதி அளிக்கிறது. இந்த திரைப்படங்களால் மாநில அரசுக்கு ஏதோ சங்கடம் வந்துவிடும் என்று அஞ்சவும் இல்லை. அதற்காக கவலைப்படவுமில்லை.

திரைப் படங்கள் இரண்டுவகையாக எடுக்கபடுகின்றன. ஒன்று உண்மைச் சம்பவங்கள் பற்றியது. மற்றொன்று கற்பனையாக எடுப்பது.

### எங்கும் நடக்கவில்லை

தண்ணீர் தண்ணீர் என்ற படத்தில் குறிப்பிடப்பட்டு இருப்பது போன்ற சம்பவங்கள் தமிழகத்தில் எங்கும் நடந்தது இல்லை.

தண்ணீர் கிடைக்கக் கோரி கிராம மக்கள் எடுத்த முயற்சியை தடுத்தும்—பெண்கள் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்த சம்பவம் எதுவும் நடந்தது இல்லை.

இதை உண்மை சம்பவம் என்று எப்படிச் சொல்வது?

கற்பனை என்றால் யாரைப் பற்றியும் யாரும் கேலி செய்து எடுக்கும் நிலை உள்ளது. அதில் யாரும் தப்பிக்கமுடியாது முடிவும் இல்லை.

வாகைக்குளத்தில் ஆயிரம் அடி ஆழத்தில் தண்ணீர் எடுக்கவும் அதனால் 45 ஆயிரம் மக்களுக்கு தண்ணீர் கிடைக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

அங்குள்ள நிலச்சுவான்தாரர்களுக்கு உட்பட்ட மக்கள் அந்த ஆழ் கிணறு இயந்திரங்களை நொறுக்கி உடைத்தனர்.

அப்போது துப்பாக்கிப் பிரயோகம் நடந்தது ஆனால்தண்ணீர்தண்ணீர் படத்தில் வந்தது போல தண்ணீர் கிடைக்க மேற்கொள்ளப்பட்ட முயற்சியைத் தடுக்க பெண்கள் மீது துப்பாக்கிப்பிரயோகம் செய்யப்படவில்லை.

உண்மைச் சம்பவம் என்ற பெயரில் நடக்காத ஒரு சம்பவத்தைநடந்தது போல எடுத்து இருக்கிறார்கள்.

### பணத்துக்காக பத்திரிகை

பணம் சம்பாதிக்கவேண்டும் என்ற எண்ணத்தில் சிலர் திரைப்படங்களை எடுத்தும், பத்திரிகைகள் நடத்தியும் வியாபாரிகளாகமாறிவிடுகிறார்கள். கலையின் பெயரால் இப்படி பல்வேறு பிரச்னைகளைச் சம்பந்தப்படுத்தி உண்மைக்கு மாறான சம்பவங்களைத் தோற்றுவிக்கிறார்கள்.

பிரிட்டிஷ் ஆட்சியின் போதுதான் காவல்துறையினரை செந்தலைப்பூச்சி என்று சொல்லிக் கேலிச் சித்திரங்கள் ஆக்கும் காட்சிகள் திரைப்படங்களில் இருந்தன.

ஆனால் இன்று கூட அந்த நிலைமையை சிலர் தொடர்கிறார்கள்.

நாட்டைப் பாதுகாக்கும் காவல் துறையினரையே கேவலமாக மக்கள் மதிக்கத்தக்க வகையில் படம் எடுக்கிறார்கள்.

ஜனநாயக நாட்டுக்கு இதுபாதகம்விளைவிப்பது ஆகும்.

இதைப் பொது மக்கள் உணர்ந்து கொள்ள வேண்டும்,

### தவறான தகவல்

மத்திய செய்தித்துறை அமைச்சர் சாத்தே சென்னை வந்திருந்த போது முதல்வர் புரட்சித் தலைவர் அவருக்கு விருந்தளித்தார்.

அந்த விருந்தின் போது திரைப்படங்கள், மற்றும் பத்திரிகைகள் பற்றி பொதுவாக அவர்கள் உரையாடினார்கள்.

ஆனால் ஒரு குறிப்பிட்ட படத்தை தடை செய்ய வேண்டும் என்று அப்போது அவர்கள் பேசவில்லை.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

# திருப்பூரில் அமைச்சர் காளிமுத்து பேசுகிறார்

திருப்பூர், மார்ச் 19— திருப்பூர் டவுன்ஹால் மைதானத்தில் வருகிற 28-ந் தேதி (ஞாயிற்றுக்கிழமை) மாலை 7 மணிக்கு அமைச்சர் காளிமுத்து பேசுகிறார். மற்றும் கொள்கை பரப்புச் செயலாளர் திருப்பூர் மணிமாறன், வெ. பழனிசாமி, எஸ். கேசவன், முகவை கண்ணன், அங்கமுத்து, அய்யப்பன், சதாசிவம் அய்யாசாமி ஆகியோரும் பேசுகிறார்கள் எம். கருப்பசாமி தலைமை வகிக்க எம். எஸ். பாண்டியன் நன்றி கூறுவார்.

கல்வி மறுமலர்ச்சியில்

# பேரறிஞர் அண்ணா கண்ட வழியில் புரட்சித்தலைவர்

## சி. கோபால் பாராட்டு

**சென்னை, மார்ச் 19-பேரறிஞர் அண்ணா கல்வித்துறையில் எத்தகைய மறுமலர்ச்சி தேவை என்று கருதினாரோ அந்த வழியில் புரட்சித்தலைவர் அரசு செயல்படுகிறது என்று கழக உறுப்பினர் சி கோபால் பாராட்டினார்.**

சட்டசபையில் கழக உறுப்பினர் சோளிங்கர் சி. கோபால் பேசுகையில் கூறியதாவது:

மக்களுடைய அறிவும் ஆற்றலும் பொருளாதாரத்தில் நல்ல வளர்ச்சியையும், வளர்க்க வேண்டிய நிலைமையும் வேண்டும் என்று சொன்னால் மக்களுக்கு தேவைப்படுகிற ஒரு நல்ல ஆயுதம்-வலிமை மிக்க ஆயுதம் கல்வித்துறைதான் என்று பேரறிஞர் அண்ணா சொல்லி யிருக்கிறார்.

தமிழ் நாட்டை ஒரு ஜப்பான் நாடாகவோ அல்லது ஜெர்மன் நாடாகவோ நான் பார்க்க வேண்டும்என்ற எண்ணம் எனக்கு இருக்கிறது என்கிற வார்த்தையை பேரறிஞர் அண்ணா பல முறை சொல்லியிருக்கிறார்.

### கல்விக்கு ரூ. 318 கோடி

அதை நினைவிலே வைத்துக் கொண்டுதான் உயர்நிலைக் கல்வித் திட்டத்தை மாற்றியமைக்க வேண்டும். தொழிற் கல்விகள் எல்லாம் உயர்நிலைப் பள்ளியின் அளவிலேயே கொண்டு வரவேண்டும் என்ற ஒரு நல்ல திட்டத்தை, ஒரு மறுமலர்ச்சியை, கல்வித்துறையில் ஏற்படுத்தியது எங்களுடைய இதயதெய்வம் புரட்சித்தலைவர் அரசு.

பேரறிஞர் அண்ணாவின் திட்டத்திற்காக அவர்களுடைய எண்ணங்களுக்காக வாழ்ந்து கொண்டிருக்கிற புரட்சித்தலைவர் அரசுதான் கல்வியில் மறுமலர்ச்சி வேண்டும் என்ற நோக்கத்திற்காக செலவு செய்யப்படுகிற ஒருதுறையாக கல்வித்துறை இருந்தாலும் கூட 1982-83ம் ஆண்டில் மொத்த வருவாய் தொகையில் ஏறக்குறைய கல்விக்காகஎன்று 318 கோடி ரூபாய் செலவு செய்ய இந்த அரசு இருக்கிறது.

கல்விக்காக பேரறிஞர் அண்ணாவின்கொள்கைக்காக நாங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.



எங்கள் ஆட்சியில் கல்வித்துறையில் ஒருமறுமலர்ச்சி ஏற்பட்டிருக்கிறது.

### சோளிங்கரில் பாலிடெக்னிக்

இந்திய துணைக்கண்டத்திலேயே தமிழகம் இரண்டாவது என்கின்ற நிலைமையில்எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் எண்ணிக்கையை உயர்த்தி தந்திருக்கிறது. இதைப் புரட்சித்தலைவர் அரசு தான் செய்திருக்கிறது.

இந்தஆண்டு 150 உடற்பயிற்சி ஆசிரியர்கள் நியமிக்கஇருப்பது பாராட்டுக்குரியது.

சோளிங்கர் வட ஆற்காடு மாவட்டத்தின் மையமாக இருப்பதால் ஒரு பால்டெக்னிக்கை அமைத்துத் தரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கல்வித்துறையில் மறுமலர்ச்சியை ஏற்படுத்தியது புரட்சித்தலைவர் அரசு.

இவ்வாறு சி. கோபால் கூறினார்.

ஐ.ஏ.எஸ். தேர்வில் பின்தங்க

# கருணாநிதி ஆட்சி கால கல்வி முறையே காரணமாகும்

## அண்ணாதாசன் கருத்து

**சென்னை, மார்ச் 19- ஐ.ஏ.எஸ்.தேர்வில் தமிழகம் பின் தங்கியிருக்கிறது என்றால் அதற்கு கருணாநிதி ஆட்சிக்கால கல்விமுறை தான் காரணம் என்று சட்டசபையில் அண்ணாதாசன் கூறினார்.**

கல்வி மானியக் கோரிக்கை மீதான விவாதத்தில் கலந்துகொண்டு பேசுகையில் அண்ணாதாசன் (கழகம்) கூறியதாவது:—

கழக ஆட்சியில் தான் கல்வி நல்ல மேம்பாடு அடைந்துள்ளது. இதிலாவது எதிர்க்கட்சியினர் குறை சொல்லாமல் இருப்பார்கள் என்று எதிர்பார்த்தேன். ஆனால் இதிலும் குறை சொன்னார்கள். தமிழாய்ந்த தமிழ்ப் பெருமகன் இப்போது ஆட்சி செய்வதால்தான் இப்போது தமிழ்ப் பல்கலைக்கழகம் அமைக்கப்பட்டுள்ளது. 'பிளஸ் டூ' என்ற நல்ல கல்வி முறையை அமைச்சர் அரங்கநாயகம் கொண்டுவந்து சாதனை புரிந்துள்ளார்.

ஐ. ஏ. எஸ்., ஐ. பி. எஸ். தேர்வில் தமிழகம் முன்னணியில் இல்லை என்று தி. மு. க.வினர் கூறினார்கள். அதற்கு அடிப்படைக் கல்வி சரியாக இருந்தால்தான் அதிக அளவில் வெற்றி பெறமுடியும். புரட்சித் தலைவர் ஆட்சிக்கு வந்து நாலரை ஆண்டுகள் தான் ஆகின்றன. அதற்கு முன் தி. மு. க. ஆட்சி இருந்தது. அந்த ஆட்சியில் அடிப்படைக் கல்வி சீர்கேடு அடைந்ததால்தான் இப்போது ஐ. ஏ. எஸ். தேர்வில் அதிக வெற்றி பெற முடியவில்லை. தொழிற்கல்வி இந்த நாலரை ஆண்டுக்கால புரட்சித்தலைவர் ஆட்சியில் தான் நல்ல முன்னேற்றம் கண்டுள்ளது.

திருவெறும்பூர் பகுதியில் மகளிர் உயர்நிலைப் பள்ளியை அமைத்துத்தர வேண்டுகிறேன்.

இவ்வாறு அண்ணாதாசன் பேசினார்.



### சங்கரன்கோயில் துரைராஜ்

சங்கரன்கோயில் துரைராஜ் (கழகம்) பேசுகையில் கூறியதாவது:-

7 ஆண்டு காலம் ஆட்சி செய்த தி.மு.க. ஆட்சிக் காலத்தில் எந்தப் பல்கலைக்கழகமும் ஏற்படுத்தப்படவில்லை. புரட்சித்தலைவர் ஆட்சிப் பொறுப்பேற்ற பிறகு, திருச்சி, கோவை, தஞ்சாவூர்ஆகியமாவட்டங்களில் பல்கலைக்கழகம் அமைக்க முயற்சிகள்மேற்கொண்டதற்கு முதல்வர் புரட்சித் தலைவருக்கு பாராட்டுத் தெரிவிக்கிறேன்.

பெண்கள் பல்கலைக் கழகத்தை நெல்லையில் துவக்க வேண்டும்.

ஊராட்சி ஒன்றிய ஆசிரியர்களை அரசுஊழியர்களாக ஆக்கியதற்கு நன்றி தெரிவிக்கிறேன்.

ஏழை மாணவர்களுக்கு இரண்டு ஜோடி சீருடைகளை இலவசமாகவழங்க வேண்டும்.

தனியார் பள்ளி நிர்வாகத்திற்கு அளிக்கும் மானியத்தை 10 சதவிகிதம் உயர்த்த வேண்டும்.

தனியார் ஆரம்பப் பள்ளிகளுக்கு நல்ல கட்டிடங்கள் இல்லை. அவற்றுக்கு அரசு கடன் வசதி அளிக்க வேண்டும்.

இவ்வாறு சங்கரன் கோயில் துரைராஜ் பேசினார்.

இந்தியாவிலேயே தமிழகத்தில் சிறப்பாக நடைபெறும்

# கிராமப்புற வேலை வாய்ப்புத் திட்டம்: சு. பழனிசாமி பாராட்டு

**சென்னை, மார்ச் 19- கிராமப்புற வேலை வாய்ப்புத் திட்டத்தை சிறப்பாக நிறைவேற்றுவதில் தமிழகம் முதலிடம் வகிப்பதாக கழக உறுப்பினர் பழனிசாமி கூறினார்.**



சட்டசபையில் உள்ளாட்சித்துறை மான்யக் கோரிக்கைகள் மீதான விவாதத்தில் கலந்து கொண்டு பேசுகையில் கழகஉறுப்பினர் சு.பழனிசாமி பேசுகையில் கூறியதாவது:—

கிராமப்புற மக்களின் முன்னேற்றத்திற்கு புரட்சித்தலைவர் கொண்டு வந்திருக்கிற இந்த தன்னிறைவுத் திட்டத்தை நாங்கள் பாராட்டுகிறோம். 1947-லேயிருந்து இதுவரையிலும் இல்லாத அளவில் ஒவ்வொரு ஒன்றியத்திற்கும், நகரத்திற்கும் 40 லட்சம், 60 லட்சம், 80 லட்சம், 1 கோடி என்ற அளவிலே செலவு செய்கிற ஒரு திட்டத்தை முதல்வர் புரட்சித் தலைவர் ஒருவர் தான் கொண்டு வந்திருக்கிறார்.

தன்னிறைவுத் திட்டத்தில் சுமார் 50 ஆயிரத்திற்கு மேல் செலவாகிற சாலை, பாலங்களை எடுத்துக் கொள்வதற்கு நல்ல வாய்ப்புள்ளதை நான் மனதார பாராட்டுகிறேன். இந்தியாவிலேயே தமிழ்நாட்டில் தான் கிராமப்புற வேலை வாய்ப்புத் திட்டம் சிறப்பாக செயல்படுகிறது என்பதை சொல்லி பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது தொகுதியில் மேடூர், சாலவேம்பு, பாலபட்டி, பட்டகாரலூர், குரும்பபாளையம், ராமேகவுண்டன்புதூர், சண்முகபுரம், இலுப்பநத்தம், தேவாங்கபுரம், பெரிய குமாரபாளையம்போன்ற இடங்களில் சுவர்கள் எழுப்பி சிறு பாலங்களை கட்டித்தர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும்மேட்டுப்பாளையத்திலிருந்து புளியம்பட்டி வரைக்கும், மேட்டுபாளையத்திலிருந்து சத்தி கோபி வரைக்கும், காரமடையிலிருந்து தோளம்பாளையம், பில்லூர், பெரிய நாயக்கன் பாளையத்திலிருந்து கோவனால் போன்ற இடங்களுக்கு அகலமான பாதையை அமைத்துத் தரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

### சிறுமலை சாலை திட்டம்

சிறு மலைச்சாலைகள் திட்டத்தில் பாலமலை ரங்கநாதர் கோவிலுக்கு தார் சாலை போட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். தோனம் பாளையம் கோப்பனாரி பாதையை இன்றைய தினம் செப்பனிட்டுக் கொண்டிருக்கிறார்கள் அதைதார் போட்டு, அந்த பகுதியிலே வாழ்கிற ஆதிவாசிகளுக்கு உதவ வேண்டுமென்று கேட்டுக் கொள்ள கடமைப்பட்டி

(1-ம் பத்தி பார்க்க)



# ஆதிதிராவிடர்களுக்கு 2 லட்சம் வீடுகள் திட்டம்: விஜயசாரதி தகவல்

**சென்னை, மார்ச் 19- ஆதிதிராவிடர்களுக்கு 5 ஆண்டுக் காலத்தில் 2 லட்சம் வீடுகள் கட்ட இருப்பதாக சட்டசபையில் அமைச்சர் விஜயசாரதி தெரிவித்தார்.**

சட்டசபையில் அமைச்சர் விஜயசாரதி கூறியதாவது:—

ஆதிதிராவிடர் நலத் துறைக்கு ஒதுக்கப்பட்ட மொத்த நிதி ஒதுக்கீடு 41.10 கோடியாகும். இதில் நிர்வாகச் செலவுக்காக 6.90 கோடியும் திட்டச் செலவுகளுக்காக 34.20 கோடியும் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

ஆதிதிராவிடர் நலத் துறை சார்பில் நடத்தப் பட்டுவரும் உயர்நிலைப் பள்ளிகள், மேல்நிலைப் பள்ளிகளில் நூலகங்கள் உள்ளன. ஆண்டுக்கு ஆயிரம் ரூபாய்க்குதேவையான நூல்கள் வாங்க வேண்டுமென உத்தர விடப்பட்டுள்ளது.

மொத்த படிப்புதவித் தொகையாக 4 கோடி ரூபாய் செலவாகிறது. மைய அரசு இரண்டே கால் கோடியும் மாநில அரசு ஒன்றேமுக்கால் கோடியும் கொடுத்து வருகிறது.

மைய அரசே மொத்த தொகை கொடுக்கிறது என்று கூறும் தகவல் தவறானது ஆகும்.

பழங்குடியினர் மேம்பாட்டுத் திட்டங்களுக்கு 1981-82ம் ஆண்டுக்கு ரூ. 393.65 லட்சம் செலவிடப்பட்டது. 1982-83ம் ஆண்டுக்கு 453.36 லட்ச ரூபாய் செலவிடப்படயிருக்கிறது.

பழங்குடியினருக்கு 12 பல நோக்கு கூட்டுறவு சங்கங்கள் உள்ளன. அதன் மூலம் அவர்கள் பல உதவிகளை பெற்று வருகின்றனர்.

ஆதிதிராவிடர்களுக்காக 1963 முதல் 1976 வரை தமிழகத்தில்மொத்தம் 1 லட்சத்து 10 ஆயிரத்து 712 வீட்டு மனைப் பட்டாக்கள் வழங்கப் பட்டன. இதற்கான மொத்த செலவு ரூ 22.78 லட்சமாகும்.

ஆனால் முதல்வர் புரட்சித்தலைவர்பொறுப்பேற்ற 1977 முதல் 31-12-81 வரை மொத்தம் ஒரு லட்சத்து 15ஆயிரத்து 256 வீட்டுமனைப் பட்டாக்கள் வழங்கப் பட்டுள்ளன. இதற்கான செலவு 412.74 லட்சம் ரூபாய் ஆகும்.

1978-ம் ஆண்டு நிலம் கையகப்படுத்தும் சட்டம் கொண்டு வந்து ஆதி திராவிடர்கட்குவீட்டுமனை பட்டா அளிக்கும் புரட்சிகரமான திட்டத்தை செயல்படுத்தினோம்,

### இலவச வீடு

ஆனால் நிலச் சொந்தக்காரர்கள் இந்தசட்டம் செல்லுபடியாகாது என்று உயர்நீதி மன்றம் சென்றுள்ளனர். இதை எதிர்த்து உச்சநீதிமன்றத்தில் முறையீடு செய்துள்ளோம்.

இருப்பினும்மைய அரசு சட்டத்தின்படி தற்போது நிலம் கையகப்படுத்தும் பணிகள் துரிதமாக நடந்து வருகின்றன.

ஆதிதிராவிடர்களுக்கு இலவச வீடு வழங்கும்திட்டம் கைவிடப்படவில்லை பொருட்களின் விலை ஏற்றம் காரணமாக எப்படி செயல்படுத்துவது என்பதை தொடர்த்து அரசு தீவிரமாக பரிசீலித்து வருகிறது.

அதுவரை மற்றொரு திட்டமான கிராமப்புற வீட்டு வசதித் திட்டத்தின் கீழ் அவர்களுக்கு வாய்ப்புகொடுக்கிறோம்.

### 2 லட்சம் வீடுகள்

இந்தத் திட்டத்தில் ஆண்டுக்கு 40 ஆயிரம் வீடுகள் வீதம் 5 ஆண்டுக்குள் 2லட்சம்வீடுகள் கட்ட ஆணைகள் பிறப்பிக்கப் பட உள்ளது.

ஆதிதிராவிட தாழ்த்தப் பட்டமக்களை பொருளாதாரத்தில் உயர்த்தும் சிறப்புக் கூட்டமைப்பு திட்டத்தினை மைய அரசின் உதவியுடன் தமிழக அரசு சிறப்பாக நிறைவேற்றி வருகிறது.

9 லட்சம் ஆதிதிராடர்களை வறுமைக் கோட்டிலிருந்து கடக்கச்செய்யும் முயற்சியில் ஈடுபட்டு உள்ளோம்.

நலிந்தோர் நல்வாழ்வுத் திட்டம் மூலமாகவும் அவர்களின் வாழ்வில் ஒளியேற்ற நடவடிக்கைகள் மேற் கொள்ளப்பட்டு வருகின்றன.

தமிழகத்தில் நடக்கும் சிறப்பு கூட்டமைப்பு திட்டத்தை கண்காணிக்கும் மைய அரசு இந்த அரசின் பணிகளை பாராட்டும் வகையில் ஒவ்வொரு ஆண்டும் சிறப்பு நிதி உதவியினை அளித்து வருகிறது.

புரட்சித் தலைவர் ஆலோசனையின் பேரில் இந்த சிறப்பு உதவிகள் வேறுவகையில் பயன் படுத்தப்படும். இதற்காக புரட்சிகரமான திட்டம் செயல்படுத்தப்பட இருக்கிறது.

சிறு தொழில்கள் மூலமாக ஆதிதிராவிட மக்களுக்கு நிரந்தர வருமானம் கிடைக்க முயற்சிகள் மேற்கொண்டுஅவர்களை தொழில் துறையில் அறிமுகப்படுத்தும் கொள்கையை அரசு ஏற்றுள்ளது.

ராமநாதபுரத்தில் 4 கோடி ரூபாய் செலவில் ஒரு புதிய நூற்பாலை ஏற்படுத்த இருக்கிறோம். இதில் 2 கோடியை ஆதி திராவிடர் வீட்டு வளர்ச்சிக் கழகம் மானியமாக அளிக்கும்.

இதன் மூலம் 400 பேருக்கு வேலைகள் கிடைக்கும்.

### ஆதிதிராவிடர்க்கு அமைக்கப்படும் நூற்பாலைகள்

அறந்தாங்கி, தேனி, தர்மபுரியில்தலா ரூ.33.75 லட்சம் செலவில் கூட்டுறவு நூற்பாலைகள் ஏற்படுத்த இருக்கிறோம். இங்கே முழுமையாக ஆதி

(6-ம் பத்தி பார்க்க)

(4-ம் பத்தி தொடர்ச்சி)

திராவிடர்களே பணியில் அமர்த்தப் படுவார்கள். 225 பேர் இதன் மூலம் பயன்பெறுவார்கள்.

செங்கற்பட்டு, தென்னாற்காடு, தஞ்சை, திருச்சி, ராமநாதபுரம் ஆகிய மாவட்டங்களில் ஆதிதிராவிடர்களுக்கு வழங்கப்பட்ட நிலப் பட்டாக்களுக்கு பாசன வசதி அளிக்க 1982 83ம்ஆண்டு ரூ.200 லட்சம் செலவில் 2000 குழாய்க் கிணறுகள் அமைக்க இருக்கிறோம். இதனால் 10 ஆயிரம் ஆதி திராவிடர் குடும்பங்கள் பயன்பெறும்.

நகரப் பகுதியில் உள்ள அருந்ததி மக்களுக்கு இலவசமாக பங்குகளையும் தையல் இயந்திரங்களையும் வழங்க 32 லட்சம் செலவிட உள்ளோம், இதனால் தமிழகம் முழுவதுமுள்ள 500பேர் பயன் பெறுவார்கள்.

சூளைப்பகுதியில்உள்ள அரசு அச்சகம் வசதியில்லாமல் உள்ளது, அதை 220 லட்சம் செலவில் மாற்றும் திட்டம் அரசின்பரிசீலனையிலுள்ளது.

எழுது பொருள் கிடங்கில் பணிபுரியும் 248 தொழிலாளர்களுக்கு பெயர் அழைக்கும் வருகை பதிவேடு முறை உள்ளது. அதை மாற்றி அவர்களுக்கு அடையாள வருகைப் பதிவேடு முறை கொண்டு வரப்படும்.

இவ்வாறு அமைச்சர் விஜயசாரதி கூறினார்.

(7-ம் பத்தி தொடர்ச்சி)

ருக்கிறேன்.

இந்த முக்கியமான வேலைகள் கழக ஆட்சியில் சீக்கிரமாக செய்து பாமர மக்களுக்கு உதவக்கூடிய முறையிலே நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு ஒவ்வொரு ஒன்றியத்திற்கும் நகரத்திற்கும் ரோலர்கள் வாங்கித்தந்து அங்கேநடக்கிற வேலைகளை விரைவாக செய்வதற்குஒத்துழைப்புத் தரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். வாட்டர் பம்புகள் அடிக்கடி ரிப்பேராகி, குடிநீர் வசதி 3,4 மாதங்களுக்கு ஒரு முறை வழங்கப்படுவதை தவிர்க்க ஒவ்வொரு யூனியனுக்கும் அதிகமாக மெக்கானிக்குகள் நியமிக்கப்பட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு சு.பழனிசாமி பேசினார்.

'டூரிங்' தியேட்டரில்

### பகல் காட்சி நடத்த பரிசீலனை

சென்னை, மார்ச் 19— சட்டசபையில் கேள்வி நேரத்தின்போது பதிலளித்து அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறியதாவது:-

தமிழகத்திலுள்ள டூரிங் தியேட்டர்களில் பகல் காட்சி நடத்த அனுமதி கோரி விண்ணப்பம் வந்திருக்கிறது. ஏற்கனவே ஓலைகளாக இருந்தது ஆஸ்பெட்டாஸ்கூரையாக்கப்பட்டிருந்ததால் லைசென்ஸ் காலத்தை மூன்றாண்டிலிருந்துஐந்து ஆண்டுகளாக உயர்த்தியிருக்கிறோம்.

பகல் காட்சி அனுமதித் தால் வரியை பரிசீலிக்க வேண்டியிருக்கிறது. அதனால் அதை வணிக வரித்துறையை பரிசீலிக்க சொல்லியிருக்கிறோம்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

சங்ககிரி தனபால் பேச்சு

# தாழ்த்தப்பட்டோரை இமைபோல் காக்கும் புரட்சித்தலைவர் அரசு

**சென்னை, மார்ச் 19- தாழ்த்தப்பட்ட மக்களை இமை போல் காத்துவருவது புரட்சித்தலைவர் அரசு தான் என்று சட்டசபையில் கழக எம். எல். ஏ. தனபால் கூறினார்.**

சட்டசபையில் கழக உறுப்பினர் சங்ககிரி தனபால் பேசுகையில் கூறியதாவது:—

சமதர்ம சமுதாயம் காண பல புதிய திட்டங்களைக் கண்டுள்ளது முதல்வர் புரட்சித் தலைவர் அரசு.

கீழ் தட்டு மக்களை மேல்தட்டுக்கு கொண்டு வரும் பணியில் அண்ணா விரும்பிய வழியில் பல்வேறு சிறப்பான கூட்டமைப்பு திட்டங்களை பழங்குடியினர் மேம்பாட்டுத் திட்டங்களை புரட்சித்தலைவர் செய்து கொண்டிருக்கிறார்.

77-ம் ஆண்டிலிருந்து ஆதிதிராவிட பழங்குடியினர் நலத்திற்காக படிப்படியாக நிதி ஒதுக்கி இந்த ஆண்டு 42 கோடியே 85 லட்ச ரூபாயாக உயர்த்தியிருப்பது வாழ்வில் ஒளியேற்றுவதாக இருக்கிறது.

இந்தத் தொகையில் 40 சதவிகிதம் கல்விக்காக செலவிட இருப்பது பெருமையளிக்கக் கூடியது.

ஆதிதிராவிட பழங்குடியினர் நலனுக்காக அரசு செயல்படுத்தி வரும் திட்டங்களை மத்திய அரசும் மற்ற மாநில அரசுகளும் பாராட்டிக்கொண்டிருக்கின்றன.

தி.மு.க. ஆட்சியில் 10 ஆண்டுகாலத்தில் 323.32 லட்சரூபாயில் 1லட்சத்து 10 ஆயிரத்து 712 வீட்டு மனைப் பட்டா அளிக்கப் பட்டது.

புரட்சித் தலைவர் பொறுப்பேற்ற 77-ம் ஆண்டிலிருந்து 4 ஆண்டு காலத்தில் 419 லட்சத்து 65 ஆயிரம் ரூபாய் செலவில் ஒரு லட்சத்து 15 ஆயிரத்து 256 வீட்டு மனைப்பட்டா வழங்கப் பட்டிருக்கிறது.

10 ஆண்டு கால அளவை 4 ஆண்டு காலத்தில் செய்து முடித்திருப்பது புரட்சித்தலைவர் அரசு தான்.

நில ஆர்ஜிதங்களை உயர்நீதி மன்றத்திற்குச் சென்று தடை வாங்கி வருகிறார்கள். இதனை விசாரிக்க தனியாக ஒரு பிரிவு உயர் நீதி மன்றத்தில் அமைக்க வேண்டும்,

தாழ்த்தப்பட்ட மக்களின் கண்ணின் இமை போல இருந்து முதல்வர் புரட்சித்தலைவர் அரசு பாதுகாத்துவருகிறது.

இவ்வாறு தனபால் கூறினார்,

கேரளத்தில் மேற்கு நோக்கிப் பாயும்

# உபரி நீரை திருப்பி தமிழகத்தில் பாசன வசதி செய்ய முடியும்

## மத்திய அரசு குழு அறிக்கை

**சென்னை, மார்ச் 19- கேரளத்தில் மேற்கு நோக்கிப் பாயும் நதிகளிலிருந்து 46 டி. எம். சி. உபரி நீரைக் கிழக்கே திருப்பி தமிழகத்தின் வறட்சிப்பகுதிகளுக்கு பாசனவசதி செய்யமுடியும் என்று மத்திய அரசு குழு அறிக்கை தந்துள்ளது.**

சட்டப் பேரவையில் இன்று அமைச்சர் ராசா முகமது தாக்கல் செய்த பொதுப்பணித் துறை மானியக் கோரிக்கையில் இந்த தகவல் தரப்பட்டுள்ளது.

அமைச்சர்ராசாமுகமது தாக்கல் செய்த அறிக்கையில் கூறப்பட்டிருப்பதாவது:

கேரளாவில் மேற்கு நோக்கிப்பாயும் நதிகளில் உபரிநீரைத் தமிழகத்தின் உள்ள வறட்சிப்பகுதிகளுக்குப் பாசனம் அளிக்க கிழக்கே திருப்புவதற்கானசாத்யக் கூறுகளை ஆராய மத்திய அரசால் ஒரு குழு அமைக்கப்பட்டு இருந்தது.

அந்தத் தொழில்நுட்பக் குழு அறிக்கை தந்துள்ளது.

கேரளாவில் உள்ள வாமனாபுரம், அச்சன் கோயிலார், மற்றும் கல்லடா ஆற்றுப்படுகையில் உபரியாக 46.66 டி.எம்.சி. தண்ணீர் உள்ளது எனவும் இதனைக் கிழக்கே திருப்புவது சாத்யம் எனவும் தெரிவித்துள்ளது.

### இருதரப்பு பேச்சுவார்த்தை

இது பற்றி ஆய்வுப்பணிகளை மேற்கொள்ள தமிழக அரசு கேரள அரசோடு இரு தரப்புப்பேச்சுவார்த்தை தொடங்கலாம் எனவும் தொழில்நுட்பக் குழு பரிந்துரை செய்துள்ளது.

அந்தக் குழுவின் கருத்தினை இந்த அரசுஏற்றுக்கொண்டு கேரள அரசோடு பேச்சுவார்த்தை நடத்த நடவடிக்கை மேற்கொண்டுள்ளது.

இப்படிக் கிடைக்கப்பெறும் உபரி நீரைத் திருப்பி விடுவதற்காக மேற்கொள்ளும் ஆய்வுப் பணிகளையும், திட்ட மதிப்பீடு தயாரித்தல் அது சம்பந்தப்பட்ட கூடுதல் விவரங்களைச் சேகரித்தல், இவற்றைக் கண்காணிப்பதற்காகவும் தர மத்திய அரசுக்கு உறுதி அளித்துள்ளது.

### தேசிய நீர் வள அமைப்பில் புரட்சித் தலைவர்

நாட்டின் நீர்வளத்தைப் பயனுள்ள முறையில் மத்திய அரசு ஒருங்கிணைப்புக் குழு ஒன்றினையும்அமைத்துள்ளது.

நாட்டின் நீர்வளத்தை முழுமையாகப் பயன்படுத்தும் வகையில் மகாநதி மற்றும் கோதாவரி உபரி நீரை கிருஷ்ணா, பெண்ணாறு, காவிரி படுகைகளுக்கு திருப்பிடலாம் என்றும் மத்திய அரசு யோசனைதெரிவித்துள்ளது.

தமிழக அரசு இந்தத் திட்டங்களை தேசிய நோக்கோடு வரவேற்று முழு ஒத்துழைப்பையும் உபயோகிக்க தேசிய நீர் வள அமைப்பு என்ற ஒரு சங்கத்தை ஏற்படுத்த மத்திய அரசு தீர்மானித்துள்ளது.

இந்த அமைப்பில் ஒரு அங்கத்தினராக இருக்க முதல்வர் புரட்சித் தலைவர்ஒத்துக்கொண்டு இருக்கிறார். தமிழக அரசின் பாசனத்துறை அமைச்சர் மாற்றுஅங்கத்தினராக இருப்பார்.

### காவிரி நீர் பிரச்னை

காவிரி நீர்ப் பிரச்னையில் இதுவரை எவ்வித உடன்பாடும் ஏற்படாததால் இதற்கு ஒரு தீர்வு காண சம்பந்தப்பட்ட அனைத்து மாநிலங்களின் கூட்டத்தைக் கூட்டுமாறு மத்திய அரசைத் தமிழக அரசுகேட்டுக்கொண்டுள்ளது.

இந்த நீண்ட காலப் பிரச்னைக்கு விரைவில் ஒரு தீர்வு காண முடியும் என இந்த அரசு நம்புகிறது.

சென்னை நகருக்கு கிருஷ்ணாநதியில் இருந்து 15 டி. எம். சி. தண்ணீர் கொண்டு வரும் திட்டத்தில் ஆந்திரமாநிலம்தனது எல்லைக்குள் ஆய்வுப் பணிகளில் பெரும் பகுதியை முடித்துவிட்டது.

ஒரு தோராய திட்ட அறிக்கையையும் தமிழக அரசுக்கு அனுப்பியுள்ளது.

தமிழக எல்லைக்குள் ஆய்வுப்பணிகள் ஏற்கனவே முடிக்கப்பட்டு விட்டன.

இது சம்பந்தமாக அரசு மேற் கொண்டு நடவடிக்கை எடுத்து வருகிறது. விரைவில் திட்டம் இறுதியாக்கப்படும் என அரசு நம்புகிறது.

### பரம்பிக்குளம் ஆளியாறு திட்டம்

பரம்பிக்குளம் ஆளியாறு திட்டம் 2.50 லட்சம்ஏக்கருக்கு பயனளித்து வருகிறது.

இதை விரிவாக்கி பெரியார் மாவட்டத்தில் 1.15 லட்சம் ஏக்கருக்கு கூடுதலாக பாசன வசதி அளிக்க ஒப்புதல் அளிக்கப்பட்டுள்ளது. இந்த வேலையின் மதிப்பீடு ரூ. 14 கோடியாகும். 1985-ல் இந்த வேலை முடியக்கூடும்.

இந்தத் திட்டத்தின் ஆயக்கட்டுகளால் சூழப்பட்ட 25 ஆயிரம் ஏக்கர் நிலங்களையும் சேர்க்க அரசு ஒப்புதல் அளித்துள்ளது. இதற்கு ரூ. 400 லட்சம் செலவாகும்.

பெரியாறு — வைகை நவீனப்படுத்தும் திட்டம் உலக வங்கி உதவியோடு ரூ. 44.50 கோடி மதிப்பீட்டில் திருத்தி அமைக்கப்பட்டு இருக்கிறது.

இந்த திட்டம் 1984-ல் முடிவு பெறும். இந்த திட்டத்திற்கு இந்த ஆண்டு ரூ. 10 கோடி செலவிடப்பட்டுள்ளது.

### புதிய திட்டங்கள்

பெரியார் மாவட்டத்தில் நொய்யல் ஆற்றில் ரூ. 713 லட்சம் செலவில் அணை கட்டுதல்.

தர்மபுரி மாவட்டத்தில் பாலக்கோடு வட்டத்தில் கேசரி குலிஹள்ளாவில் ரூ.279 லட்சம் செலவில் நீர்த்தேக்கம் கட்டுதல்.

குமரி மாவட்டத்தில் திருப்பரப்பு அணைக்கட்டின் வலப்புறக் கால்வாயை விரிவு படுத்தல். இதற்கு ரூ. 46.70 லட்சம் மதிப்பீடு.

ஆகிய இந்த 3 திட்டங்களுக்கும் அரசு அண்மையில் ஒப்புதல் அளித்துள்ளது.

பொதுப்பணித்துறையின் ஆய்வில் 28 திட்டங்கள் உள்ளன. ரூ. 63 கோடி செலவில் 70 ஆயிரம் ஏக்கருக்கு பாசனவசதி கிடைக்கும் திட்டங்கள் இவை.

6-வது ஐந்தாண்டு திட்டத்தில் வெள்ளத்தடுப்பு பணிகளுக்காக ரூ. 19 கோடி செலவிட நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

இந்த ஆண்டு சிறப்பு சிறு பாசனத் திட்டங்களுக்கு ரூ. 255லட்சமும், தூர் வார ரூ. 3.41 லட்சமும் ஒதுக்கப்பட்டுள்ளது.

தமிழகத்தில் உள்ள 9886 முன்னாள் ஜமீன் குளங்களில் ஏற்கனவே 4698கண்மாய்கள் தரப்படுத்தப்பட்டுள்ளன.

மற்ற கண்மாய்களை சீரமைக்க இந்த ஆண்டு ரூ. 3 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு அந்தக் குறிப்பில் அமைச்சர் ராசா முகமது குறிப்பிட்டுள்ளார்.

---

ராஜ்யசபைக்கு டிக்கெட் இல்லை

# மத்திய மந்திரிகள் இருவர் பதவி இழக்கிறார்கள்

**புதுடெல்லி, மார்ச் 19- மாநிலங்களவை தேர்தலில், போட்டியிட இந்திரா காங்கிரஸ் டிக்கெட் கிடைக்காத மத்திய மந்திரிகள் இருவர் பதவி இழக்கிறார்கள்**

மாநிலங்களவைத் தேர்தலில்போட்டியிட உள்ள இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் பெயர்களை இந்திரா காங்கிரஸ் கட்சி மேலிடம் வெளியிட்டுள்ளது.

தற்போது மத்திய அமைச்சர்களாக இருந்து வரும், சிசோடியா, சரண் ஜித் சனானா ஆகிய இருவரும் தற்போது ராஜ்யசபையில் உறுப்பினர்களாக இருந்து வருகிறார்கள். இவர்களின் உறுப்பினர் பதவிக்காலம்முடிவடைவதால்மீண்டும்போட்டியிட கட்சி மேலிடத்தில் அனுமதி கேட்டிருந்தனர், ஆனால் இந்த இரு மந்திரிகளுக்கும் தேர்தலில் போட்டியிட கட்சி அனுமதி அளிக்கவில்லை.

டெல்லி மெட்ரோபாலிடன் கவுன்சில் கலைக்கப்பட்டுள்ளதால், அந்தக் கவுன்சில் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சனானாதற்போது அங்கு போட்டியிட இயலவில்லை.

உத்திரபிரதேச மாநிலத்தில் சனானாபோட்டியிடுவதாக இருந்தது. ஆனால் அம்மாநில இந்திரா காங்கிரசார் அதற்கு கடும் எதிர்ப்பு தெரிவிக்கவே சனானாவிற்கு இந்திரா காங்கிரஸ் சார்பில் போட்டியிட டிக்கெட் கிடைக்கவில்லை.

ராஜஸ்தான் மாநிலத்திலிருந்து முன்பு தேர்ந்தெடுக்கப்பட்ட தினேஷ் சந்திரசாமிக்கும் இந்திரா காங்கிரஸ் கட்சி மேலிடம் மீண்டும் டிக்கெட் அளிக்கவில்லை.

மற்றொரு மத்திய துணை மந்திரியான முகமதுஉஸ்மான் ஆரிபுக்கு தேர்தலில் போட்டியிட கடைசி நிமிடத்தில் தான் டிக்கெட் வழங்கப்பட்டது.

---

மாநகராட்சிகள், நகராட்சிகள்

### தனி அதிகாரி பதவிக்காலம் நீடிப்பு

சென்னை. மார்ச் 19— சென்னை,மதுரைகோவை மாநகராட்சிகள், மற்ற நகராட்சிகள் தனி அதிகாரிகளின் பதவிக் காலம் ஓராண்டு காலத்திற்கு நீடிக்கப்படுகிறது.

நகரசபைகள் தனி அதிகாரிகள் பதவிக்காலம் மார்ச் 31-ம் தேதியோடு முடிவடைகிறது.

கோவை மாநகராட்சி தனி அதிகாரி பதவிக் காலம் 11—6—82 லும் சென்னை மாநகராட்சி தனி அதிகாரி பதவிகாலம் 30-5-82ல் முடிகிறது.

பஞ்சாயத்து யூனியன் தேர்தல் பற்றி உயர்நீதி மன்றத்தில் வழக்குகள் இருப்பதால் வழக்குகள் முடிய சிறிது காலம்ஆகும். அதுமுடிந்த பிறகே நகரசபை தேர்தல் நடத்த வேண்டியுள்ளது'

ஆகவே அதற்குத் தகுந்தவாறு நகர சபைகளுக்கும், சென்னை, கோவை மாநகராட்சிகளுக்கும் தனி அதிகாரிகள் பதவிக்காலம் நீடிக்க வகை செய்ய 3 மசோதாக்கள் நேற்று சட்டமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டது.

அமைச்சர் குழந்தைவேலு இந்த மசோதாக்களை தாக்கல்செய்தார்.

---

# பல மாடி அரசு அலுவலகங்கள் கட்ட ரூ. 10 கோடி திட்டம்

**சென்னை, மார்ச் 19- சென்னை நகரில் உள்ள காலி இடங்களில் பலமாடிக் கட்டிடங்கள் கட்ட அரசு திட்டமிட்டுள்ளது. இதற்காக ரூ. 1000 லட்சம் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.**

பொதுப்பணித்துறை கட்டிடங்கள்மீதானமானியக் கோரிக்கை கொள்கை விளக்கக் குறிப்பில் இந்த தகவலை அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் கூறியுள்ளார். அதன் விவரம் வருமாறு:

சென்னைப் பெருநகர் பகுதியில் உள்ள காலியிடங்களில் ஆறாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் பன்மாடி அலுவலகக் கட்டிடங்கள் கட்ட திட்டமிடப்பட்டுள்ளது.

மேலும் மாவட்ட, வட்ட தலைமையகங்களிலும் இதுபோன்ற அலுவலகக் கட்டிடங்கள்கட்டி ஏற்கனவே உள்ள தனிநபர் வாடகைக்கட்டிடங்களில் உள்ள அலுவலகங்களை சொந்தக் கட்டிடங்களில் வைக்க திட்டமிடப்பட்டுள்ளது.

மேலும் மாநிலத்தில் பல்வேறு இடங்களில் குடியிருப்பு இல்லங்கள் கட்டுதல் மற்றும்சுற்றுலா மாளிகைகள், ஆய்வு மாளிகைகள்கட்டுவதற்கு திட்டமிடப்பட்டு பல்வேறு நிலைகளில் செயல்படுத்தப்பட இருக்கிறது,

இப்பணிகளுக்கென ரூ. 1,000 இலட்சங்கள் ஒதுக்கிடு செய்யப்பட்டிருக்கிறது. இப்பணிகள் படிப்படியாக மேற்கொள்ளப்படும்.

### ரூ.50 லட்சத்தில் காவல் நிலைய கட்டிடங்கள்

சென்னை அடையாற்றில் கிரின்வேஸ் சாலையிலுள்ள அரசிற்குச்சொந்தமான காலியிடங்களில் அமைச்சர்களின் குடியிருப்பிற்காக பத்து இல்லங்கள்கட்டுவதற்கு ஏற்கனவே திட்டமிட்டதற்குப் பதிலாக தற்போது ரூ. 202.00 இலட்சங்கள் செலவில் 24 இல்லங்கள் கட்டுவதற்கு அரசு ஒப்புதல் அளித்துள்ளது.

மாநிலத்தின் நகரப் பகுதி மற்றும் வெளியூர் புறங்களில் 150 இடங்களில் ரூ. 300 லட்சம் செலவில் தேவைக்கேற்ற வகையில் காவல் நிலையங்கள் கட்டுவதற்கான ஆணைகள் வெளியிடப்பட்டுள்ளது.

இவ்வாறு அந்தக்குறிப்பில் அமைச்சர் ராஜேந்திரன் குறிப்பிட்டுள்ளார்.

---

நாவலர் தகவல்

### மருது-பாண்டியர் வாரிசுகட்கு உதவி நிதி

சென்னை, மார்ச் 19— சட்டசபையில் கேள்வி ஒன்றுக்கு பதிலளித்து அவை முன்னவர் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறியதாவது:-

வீரபாண்டிய கட்டபொம்மன் சந்ததியினர் 10 பேருக்கு ஒய்வூதியம் 81-ம் ஆண்டு அக்டோபர் முதல் 150 ரூபாய் வீதம் அளிக்கப்படுகிறது.

மருது பாண்டியர்வாரிசுதாரர் பற்றி ஆராய அமைக்கப்பட்ட குழு 8 அத்தியாயம் கொண்ட அறிக்கை தந்துள்ளது. பெண்வழி வாரிசு ஆண்வழி வாரிசு யெல்லாம் அதில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை சட்ட இலாகா ஆராய்ந்து வருகிறது. அந்த முடிவு வந்தவுடன் யார் யாருக்கு வழங்குவது என்று முடிவெடுக்கப்படும்.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

---

வதந்திகளைக் கிளப்பாதீர்:

# மூன்று பேர் கொலையா? சுத்தப் பொய்

## குமரி மாவட்ட கலெக்டர் அறிக்கை

**நாகர்கோவில். மார்ச் 19- கன்னியாகுமரி மாவட்டத்தில் நேற்று மூவர் கொல்லப்பட்டார்கள் என்று செய்தி வந்திருப்பது சுத்தப் பொய். அதற்கு அடிப்படையே இல்லை என்று குமரி மாவட்ட ஆட்சித்தலைவர் பிரானேஷ் மறுத்துள்ளார்.**

அங்கேகொலை,இங்கே கலகம் என்று வதந்திகளையும், புரளிகளையும் கிளப்பாதீர் என்று வேண்டுகோள் விடுத்துள்ளார்.

கன்னியாகுமரி மாவட்ட நிலை குறித்து குமரி மாவட்ட ஆட்சித்தலைவர் ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளார்.

குமரி மாவட்டத்தில் நேற்று மூவர் கொல்லப்பட்டதாக வெளிவந்துள்ள செய்தியை பிரானேஷ் மறுத்துள்ளார்.

சில பத்திரிகைகளில் இப்படிப்பட்ட செய்தி வந்திருப்பது முழுக்க முழுக்கப்பொய். மோதலில் இவர்கள் கொல்லப்பட்டு இருப்பதாக செய்தி வெளியிட்டு இருக்கிறார்கள்.

இதுகுறித்து நான் தீர விசாரித்தேன். இப்படிப்பட்ட செய்திக்கு அடிப்படையே இல்லை என்று தெரியவந்துள்ளது.

ஆகவே பத்திரிகைகளையும், பொது மக்களையும் நான் பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

உண்மையற்ற தவறான செய்திகளை வெளியிடாதீர்கள் என்று பத்திரிகைகளைக் கேட்டுக் கொள்கிறேன்.

அதுபோல வதந்திகளை நம்பாதீர்கள் என்று பொதுமக்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

அங்கே கொலை, இங்கே கலகம், கலவரம் என்று வதந்திகளைக் கிளப்புவார்கள்.

அத்தகையவதந்திகளை அடியோடு ஒதுக்கித் தள்ளுங்கள். வதந்திகளை நம்பாதீர்கள்.

இவ்வாறு குமரி மாவட்ட ஆட்சித்தலைவர் பிரானேஷ் அறிக்கையில் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

---

### சட்டசபையில் கருணாநிதியின் காதல் பாட்டு

சென்னை, மார்ச் 19— கருணாநிதி எழுதியகாதல் பாட்டை சட்டசபையில் தி.மு.க. உறுப்பினர் ஒருவர் வாசித்துக் காட்டினா.

ஒரு வேளாண்மைக் கருத்தரங்கில் கருணாநிதி முன்பு வாசித்த கவிதை ஒன்றை நீர்ப்பாசன மானியக் கோரிக்கை மீதான விவாதத்தின் போது பேசிய தி.மு.க. உறுப்பினர் ராமலிங்கம் வாசித்துக் காட்டினார். தஞ்சை மாவட்டத்திலுள்ள அணைக்கட்டுகள், ஆறுகளை மையமாக வைத்து எழுதப்பட்ட அந்தக் காதல் பாட்டில் "காவிரி பெண் மேல் காதல் கொள்வது போலும், இனி யாரிடுவார் அந்தக் காதலுக்கு கல்லணை" என்றும் காதல் ரசம் சொட்ட கருணாநிதி எழுதியுள்ளார். இதைக் கேட்ட உறுப்பினர் களிடையே பலத்த சிரிப்பு எழுந்தது.

"மானியக் கோரிக்கை மீது பேசச் சொன்னால் காதல்பாட்டைப்படித்துக் கொண்டிருக்கிறீர்களே" என்று துணைசபாநாயகர் பி. எச். பாண்டியன் நகைச்சுவையாகக் குறிப்பிட்டார். என்றாலும் ராமலிங்கம் தொடர்ந்து அந்தக் கவிதையை வாசித்துக் கொண்டிருந்தார்.

உடனே அமைச்சர் ராஜாமுகமது எழுந்து உறுப்பினர்கள் எல்லாம் வீட்டிலிருந்துஇங்கேவந்து நீண்ட நாட்களாகத்தங்கியிருக்கிறார்கள். இந்த நேரத்தில் காதல்பாட்டை உறுப்பினர்பாடுகிறாரே" என்றபோது சபையில் மேலும் சிரிப்பு எழுந்தது.

---

# ரஷ்ய மொழியில் சிலப்பதிகாரம்-மணிமேகலை-முத்தொள்ளாயிரம்

சென்னை, மார்ச் 19— தமிழ் இலக்கியங்களான, சிலப்பதிகாரம், மணிமேகலை, முத்தொள்ளாயிரம்ஆகியஇலக்கியங்கள் ரஷ்ய மொழியில் மொழி பெயர்க்கப்பட உள்ளன.

மாஸ்கோவில் உள்ள மொழி ஆராய்ச்சி நிறுவனத்தினர் இந்தப் பணியினை மேற்கொள்ள உள்ளார்கள்.

இத்தகவலை அந்நிறுவனத் தலைவர் டாக்டர் பான்கார்ட்-லீவின் தெரிவித்துள்ளார்.

ஏற்கனவே ரஷ்ய மொழியில் திருக்குறள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது நினைவிருக்கலாம்.

---



---



Published by K.Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road. Madras-600 029.
Editor:
K. PARASURAMAN